உ

சிவமயம்.

கணபதிதுணை.

இரத்தாக்ஷி௵ மார்கழி௴ ௰௨உ, ௰௩உ

(1924௵ டிசம்பர்௴ 26, 27உகளில்)

இரங்கூனைச் சேர்ந்த திருக்கம்பையில்

நடைபெற்ற

# பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மகா நாட்டின் முதற் கூட்டத்தில்

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின்

சங்கத்து

இவ்வருடத்திய நிரந்தர அக்ராசனர்

## திருவாளர், சா. அ. ராம. சாமிநாதச் செட்டியாரவர்கள், புரிந்த உபந்நியாசம்.



"சுதேசபரிபாலினி" பிரஸ், இரங்கோன்.




சிவமயம்.

கணபதிதுணை.

இரத்தாக்ஷி-௵ மார்கழி-௴ ௰௨௳, ௰௩௳
(1924-௵ டிசம்பர்௴ 26, 27௳களில்)

இரங்கூனைச் சேர்ந்த திருக்கம்பையில்
நடைபெற்ற

# பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மகா நாட்டின் முதற் கூட்டத்தில்,

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின்
சங்கத்து

இவ்வருடத்திய நிரந்தர அக்ராசனர்

## திருவாளர், சா. அ. ராம. சாமிநாதச் செட்டியாரவர்கள்,

## புரிந்த உபந்நியாசம்.

---



பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின்
சங்க அக்ராசனர்
ஸ்ரீமான் சா. அ. ராம. சாமிநாதச் செட்டியாரவர்கள்.

சிவமயம்.

கணபதிதுணை.

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின்
சங்கத்து இவ்வருடத்திய நிரந்தர
அக்ராசனர்

# திருவாளர், சா. அ. ராம. சாமிநாதச் செட்டியாரவர்கள் புரிந்த உபந்நியாசம்.

---

அன்பு கெழுமிய பெரியோர்களே! சகோதரர்களே!!

நீர்வளம், நிலவளம், பொருள்வளம், தொழில் வளம், முதலிய பல வளங்களும் ஒருங்கே யமையப் பெற்ற இப்பர்மா தேயத்தின் தலைநகராகிய இரங்கூனைச் சிறிது தூரத்திற் கொண்ட வளமிகுமித்திருக் கம்பையின்கண் நமது சங்க ஒதாவில் இம் மகாநாடு கூடுகிறது.

இம்மகாநாட்டில் என்னை நமது சங்க அக்ராசனர் என்ற முறையில் உபந்நியசிக்க வேண்டுமெனத் தாங்கள் கேட்டுக்கொண்டதை மறுத்தற்கஞ்சி உபந்நியசிக்கப் புகுகின்றேன். அறிவிலும், ஆற்றலிலும், ஆண்டிலும், இளைய யான் உங்களாசிர்வாதத்தை மேற்

கொண்டு கூறும் விஷயங்களில் குறை யிருப்பின் நீர் பிரித்துப் பாலுண்ணுமன்னம்போற் கொள்வீர்களென நம்புகிறேன்.

நமது சங்க உள்நாட்டு அங்கத்தினர்களிற் பெரும் பாலோர் இப்பொழுதிருக்கும் உரிமையினின்றும், நிர் வாக சபையிலும் உரிமை வேண்டுமென எண்ணுகிறார் களென்ற செய்தி ஒரு புறமும், சங்கம் அவசியம் வேண்டியதுதானாவென யோஜிக்கிறார்களென்ற செய்தி மற்றொரு புறமும் எட்டிக்கொண்டே யிருந்தன. இப் பொழுது சந்தாத் தொகைகளும் சுறுசுறுப்பாக வரு வதினின்றும் சிறிது தாமதித்தன. இந்நிலையில் நமது சங்க அங்கத்தினர்கள் யாவரையும் ஒருங்கே கூட்டிச் சரியானபடி யோஜித்து ஒரு முடிவுக்கு வருவது நலந் தருமென வெண்ணி நமது சங்க அங்கத்தினர்கள் பல ரைக் கலந்ததில் அவர்களும் இதே யபிப்பிராயங் கொண்டார்கள். பின்னர் மகாநாடு எப்பொழுது கூட்டலாமென யோஜித்ததில் தைப்பூச விழாவிற் கூட்டினாற் செலவு மீதமாகுமெனப் பெரும்பாலோர் எண்ணினார்களானாலும் உள்நாட்டு அங்கத்தினர்களனை வரும் வருதற்குப் பெரும்பாலாக ஆங்காங்கும் ஃதப் பூசங்கள் நடைபெறுவதாற் றடைப்படுமெனக் கருதி விட்டார்கள். மகசூல் காலமாரம்பிக்கு முன்னரே மகா நாடு கூட்டிவிடுவது நலந்தருமென வெண்ணியதற் கிணங்க, இது நம்மவருக்கு ஓய்வான காலமாகவும் கோர்ட்டுகள் பேங்குகளின் விடுமுறை நாட்களாகவு மிருந்தபடியால் இது தகுதியான நாட்களாகலாமென வெண்ணி அன்பர்கள் பலரைக் கலந்து இந்நாட்கள் குறிப்பிடப்பெற்றன. இது முதன் முதற் கூடும் கூட்டமாதலான் கட்டணமின்றிக் கூட்டுவது சாலச் சிறப்பாக விருக்குமென்றும் ஏற்படுஞ் செலவைச் சங் கத்திலேயே யேற்றுக்கொள்ள வேண்டுமென்றும் தீர்

மானிக்கப்பெற்ற தாதலான் ஆகும் செலவுகளை நமது சங்கப் பொறுப்பிலேயே கொடுத்து வருகிறோம். நமது சங்கச் சந்தா முறைப்படி வசூலாகுமானால் வருடத்திற்கோர் முறை மகாநாடு கூட்டுவதற்குக் கட்டணம் விதிக்க வேண்டிய அவசியமேயில்லை. முதன் முதலாக "சங்கம்" வேண்டுமா வென்று யோஜித்துக் கொண்டிருக்கும் அன்பர்களுக்கு யானறிந்துகொண்டிருப்பதைக் கூறவேண்டியது மிகவும் அவசியமாகிறது. ஒவ்வொரு நாட்டாரும் ஒவ்வொரு சமூகத்தாரும் சங்கங்களாலும் மகாநாடுகளாலும் பத்திரிகைகளாலுமே முன்னேற்றமடைந்து வருகின்றார்கள். உதாரணமாகச் சமீபத்தில் நடந்த பெரிய யுத்தத்தை யாரும் மறந்திருக்கமாட்டார்கள். அந்தக் கொடூரமான யுத்தமும் சர்வதேச சங்கத்தாலே தான் நின்றன. வெகு நாட்களாகக் கூடாதிருந்த தொண்ணூற்றுறார்க் கூட்டமும் ஊழியர் சங்கத்தாலேதான் கூடின. பலர் ஒன்று சேர்ந்து கூடுவதற்குக் கூட்டம் அல்லது சங்கம் என்று பெயர் பெறும். பலர் ஒன்று சேர்வது மிக உறுதி பயக்குமென்பதை நமது ஐந்தாம் வேதமாகிய பாரதத்தில் "ஒரு குலத்திற் பிறந்தார்களுடன் வாழும் வாழ்வினைப்போ லுறுதியுண்டோ" என விளக்கமாகக் கூறப்பெற்றிருக்கிறது.

இனி நமது சங்கத்தின் நிர்வாக சபையின் உரிமை உள்நாட்டு அங்கத்தினர்கட்கு வேண்டுமென்பதை யான் ஆதரிக்கிறேன். ஆனால் மாதந்தோறும் நிர்வாக சபைக் கூட்டம் இலகுவாக நடைபெறும்படியான முறையைத் தீர்மான வாயிலாக நன்காலோசித்து ஒரு முடிவுக்கு வருவது நலமென வெண்ணுகிறேன். நிர்வாக சபை அங்கத்தினர் பதவியைப் பெற்றுவிடுவது மட்டும் போதாது. சிரத்தையோடு அதனைப் பயன்படுத்துவது சாலச்சிறந்ததாகும்.

இனி வருடா வருடம் நமது மகாநாட்டை எப்பொழுது! எவ்வவவிடத்து!! கட்டணம் விதித்தா!!! விதியாமலா!!! என்ற விஷயங்களையும் நாம் ஒரு முடிவு செய்துகொள்ளல் வேண்டும்.

இந்த நாகரிக வுலகத்திற் பணமின்றி ஒரு சிறு காரியத்தையும் சிரத்தையோடு செய்வது அசாத்திய மாகும். இந்நிலையில் ஒரு பெரிய சமூகத்தாரது சங்கத்தை நடாத்திக்கொண்டு போவதற்குப் பொருள் வேண்டுவதவசிய மென்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. வருடத்தில் ஒரு கடைக்குப் பன்னிரண்டு ரூபாய் கொடுப்பது நம்மவர்களுக்கு ஒரு பெரிய காரியமன்று. வேறு விஷயங்களில் நமக்குட் பல பிணக்குகளிருந்தாலும் இம்மாதிரிப் பொது விஷயங்களில் அவைகளைப் பொருட்படுத்தாது ஒருவர்க்கொருவர் பரஸ்பரம் விட்டுக் கொடுத்தாலன்றிக் காரியங்கள் செவ்வனே நடைபெறுவது சிரம சாத்தியமாகிவிடும். இப்பொழுது மகாநாட்டிலாகுந் தீர்மானங்களை உறுதிப்படுத்திக்கொள்ளுவதற்கு நமது சங்கம் உரம் பெற்றிருந்தாலன்றி முடியுமா? சந்தாத் தொகைகளை அவ்வவ்வூர் நகரத்தார் மகமை யெழுதும்பொழுது சேர்த்துக் கொடுத்துவிடுவார்களானாற் கணக்குக்காரர் அதனை நமது சங்கத்திற் கனுப்பிவிடுவார்கள். தர்ம குலத்திலே பிறந்த உங்கள் முன்னிலையில் இதனைப்பற்றி அடுத்தடுத்து விசேஷமாகக் கூறுவது மிகையாகுமென வெண்ணி விடுக்கின்றேன்.

முன்னாளில் நம்முன்னோர்கள் நமது நாட்டிலேயே வியாபாரம் செய்து அயல்நாட்டுக்குத் தேவையாகவுள்ளதும் நமது நாட்டிலெஞ்சியதுமான சரக்குகளை மரக்கல வழியாகவும்கூடக் கொண்டு போய் வியாபாரம் செய்து பெரும் புகழ் பெற்றிருந்தனர். பின்னர் கால

பேதத்தால் அவ்வியாபாரங்கள் நம்மை விட்டகலவே இடையிலிருந்து சம்பாதிப்பதை ஒரு பொருட்படுத்தாது சிறு ஊதியமுள்ள வட்டித்தொழிலை மேற்கொண்டு உள்நாடு வெளி நாடுகளுக்குஞ்சென்று நமது தொழிலைத் திறம்பட நடாத்திக்கொண்டு வருகின்றோம். நாம் சென்று தொழிலியற்றி வரும் நாடுகளில் முக்கியமானது "இன்றுடும்" "சிலோன்" "மலேயா" நாடுகளுமாகும்." இவைகளில் ஏற்கனவே "சிலோன்" "மலேயா" நாடுகள் பிரிட்டிஷாரின் வெளி நாடுகளென மதிக்கப்பெற்றுச் சட்ட திட்டங்களியற்றி யிருப்பதால் நமது தொழின்முறை சம்மந்தமாக ஏதேனுந் தொகைகள் வருத்தினுற்கூட வருமான வரி டிபார்ட்டுமெண்டுக்கு வகை சொல்ல முடியவில்லை. இப்பர்மா நாடொன்றுதான் நம்மவருக்குப் பலவகையிலும் சாதகமாக விருந்தது. இப்பொழுது பர்மாவையும் இந்தியாவினின்று பிரிக்க யோஜிப்பதாகச் செய்தி யெட்டுகிறது. அந்த யோஜனைப்படி முடியுமானுல் நமது தொழில், வியாபாரம், ஏற்றுமதி, இறக்குமதி முதலியவற்றிற்கு நிச்சயமாகப் பெருங் குந்தகமேற்படுமென்றே எண்ணுகிறேன். இவ்விஷயத்திற் காருண்ய அரசாங்கத்தார் கருணை காட்டவேண்டியது மிக முக்கியமும் அவசியமுமாகும்.

இனி நம்மவருக்கெனக் கூட்டுறவு நாணயச்சாலை (பேங்க்) களை ஆங்காங்கு நிறுவிக்கொள்ளுதல் மிகவும் அவசியமாகும். இரங்கூனில் ஒரு கூட்டுறவு நாணயச்சாலை நிறுவுதல் இன்றியமையாததாகும். அந்நாணயச்சாலையின் ஷேர்கள் நம்மவர்களேபெறல்வேண்டுமென்ற திட்டமுமிருக்க வேண்டும். நம்மவர்களைக்கொண்டே நடாத்துதலும் வேண்டும். நடாத்தும் முறை மேனுட்டு முறையையும் நமது தொழின் முறையையும் அநுசரித்ததாக விருத்தல் வேண்டும். கூட்டுறவுத் தொழிற்

சாலைகளையும் இவ்வாறே நிறுவிக்கொள்ளுதல் சாலச் சிறந்ததாகும். எதனையுங் காலந் தாழ்த்தாது விரைவிற் செய்தல் வேண்டும்.

பேங்குகளுக்கும் கோர்ட்டுகளுக்கும் தைப்பூசத் தன்றும் அதன் மறுநாளுமாகிய இரண்டு நாட்களையும் விடுமுறை நாட்களெனக் கவர்ன்மெண்டார் உத்திர வளிக்க வேண்டுவது மிகவும் அவசியமாகும். நாமும் மற்ற தமிழ் வகுப்பார் ஒவ்வொருவரும் இங்கு இத் தைப்பூசத்தையே பெருநாட்களாகக் கொண்டாடுகி ரோம். இரண்டு நாளதிகமென வெண்ணினால் தைப் பூசத்தன்றேனும் ஒரு நாளைக்குப் பர்மா முழுவதற்கும் விடுமுறை நாளாகக் குறிப்பிட வேண்டுமெனக் கவர்ன் மெண்டாரை நமது சங்கத்தின் மூலமாகக் கேட்டுக் கொள்ளல் வேண்டும்.

நமது சிறுவர்களைத் தமிழ்க்கல்வி நன்கு கற்றபின் னர் இத்தேயத்திற் கழைத்துவரும் முறை நலந்தரு வனவாகும். ஆனாற் சிறுவர்களை யிங்கழைத்து வரு வதிற் பெரும்பாலாகத் தேர்ச்சியும் ஒழுக்கமுமுடைய வர்களாகின்றார்களென்பதையும் மறுக்க முடியவில்லை. ஒன்று நன்கு படித்தபிறகு கூட்டி வருதல் வேண்டும். இன்றேல் இந்நாட்டில் முக்கியமான வூர்களில் உபாத் தியாயர்களை நியமித்து கல்வி போதிக்கவேண்டும். தமிழ்க்கல்வியை நன்கு போதிக்கவேண்டியதுடன் நமது தொழிலுக்கு மிகவும் இன்றியமையாததும் இரா ஜபாஷையாகவுமுள்ள ஆங்கிலக் கல்வியையும் நன்கு போதித்தல் அவசியமாகும். அவ்வாறு கற்றுக்கொ ண்ட சிறுவர்கள் நமது சமயத்தையும் விபூதி உத்திரா க்ஷதாரணத்தையும் சுத்த போஜனம் அருந்துவதையும் மறத்தல் கூடாது. இரங்கோனில் இப்பொழுதுள்ள கலாசாலையை விருத்தியாம்சத்திற்குக் கொண்டு வர வேண்டியது மிகவும் முக்கியமாகும்.

இன்கம்டேக்ஸ் விஷயத்தைப்பற்றிச் சில கூற வேண்டியது அவசியமாகிறது. வருடவாரியிற் கணக்குகளை நன்குமுடித்துக் காட்டிவிடுவது மிக மேன்மையாகும் வருமான வரிச்சட்டம் திருத்தப்பெற்றாலன்றி வரித் தொகை குறையுமென எதிர்பார்க்க முடியாது' ஆனல் நம்மவர்கள் ரொக்கப் பாக்கி விகிதம் (கேஷ் பாலென்ஸ் சிஷ்டம்) காட்டுவோமானல் வரிச்சுமை வலுக்காதென்றே நினைக்கிறேன் அவ்விதங்காட்டுவதற்கு வருடவாரியிற் கணக்கு முடித்துவிடுவது மிக உதவியாகவிருக்கும் எதிலும் நாம் உண்மையோடு சென்றுகொண்டிருந்தால் எதிர்பாராத நன்மையைப் பெறலாம் இன்றேனும் தீமையேனும் நம்மை வந்தணுகாது.

சகோதரர்களே !

இனி நடக்கவேண்டிய வேலைகளும் மிகுதியாகவிருக்கின்றன. உங்கள் அரிய காலமும் நீண்டு செல்கின்றன நமது நாட்டில் நமது சமூக முன்னேற்றத்தை தடுத்துக்கொண்டிருக்கும் சில முக்கியமான விஷயங்களைக் கூறிவிட்டு நிறுத்திவிடுகின்றேன்.

நமது வணிகர் சமூகத்தைப்பற்றிக் கூறுமிடத்து

குமரேசர் சதகத்தார்.

கொண்டபடிபோலும் விலைபேசி லாபஞ் சிறிது
கூடிவர நய முரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம் வாராதபடி
குறுகவே செலவு செய்வார்
வண்டப் புரட்டர் தாம் முறி தந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந்திடார்
மருவு நாணய முளோர் கேட்டனுப்புகினு மவர்
வார்த்தையிலெலாங் கொடுப்பார்

கண்டெழுது பற்றுவரவினின் மயிர் பிளந்தே
கணக்கிலணுவாகிலும் விடார்
காசு வீணிற் செலவிடாருசிதமானதிற்
கன திரவியங்கள் விடுவார்
மண்டலத்தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகற்கு முறைமை யிவைகாண்
மயிலேறி விளையாடு குகனே புல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

என்று கூறுகிறார். இக்கவியை நோக்குங்கால் நமது வணிக மக்கள் வியாபாரத்தில் உண்மையையே சொல்லுபவர்களென்றும் (தங்களுடைய குடும்ப வாழ்க்கையையும் குல தர்மத்தையும் நடாத்தச்) சிறிது லாபம் கூடிவர ஆதாயம் வைத்துச் சொல்லுபவர்களென்றும், மோசக்காரர்கள் தஸ்தாவேஸ் எழுதித் தந்து தங்கத்தையே கொண்டுவந்து வைத்தாலுங் கடன் கொடுக்காதவர்களென்றும், நாணயத்திற் சிறந்தவர்கள் கேட்டுவிட்டாலும் வாய் நம்பிக்கையிலேயே யெல்லாவற்றையுங் கொடுப்பவர்களென்றும், பற்றுவரவு கண்டெழுதுவதிற் கணக்கில் அணுக்கூட நியாயமாகவிடாதவர்களென்றும், வீணாக ஒரு காசு கூடச் செலவிடமாட்டார்களென்றும் உசிதமென்று கண்டால் கணக்கற்ற செல்வங்களைத் தாராளமாய்க் கொடுப்பவர்களென்றும் இது நம்மவர்களின் முறையென்றுங் கூறிப்போந்திருப்பதை ஒரு புறம் எண்ணி மேதகு சிறப்புவாய்ந்த இத்தர்ம சமூகத்தில் இன்றைக்கு இரண்டாயிரம் வாலிபர்கள் மணமின்றி யிருப்பதை மற்றொரு புறம் எண்ணினுற் சமூகப்பற்றுள்ள எவர் மனந்தான் துன்புறுதிருக்கும்! இவ்வாறு மணங்கள் தடைப்பட்டிருப்பதற்குக் காரணம் வீண் செலவு, ஆடம்பரச் செலவுகளும், சீர்முறைகளும் கணக்கின்றி யதிகப்பட்டு பெண் வீட்டுக்காரிற் சிலர் செலவுகளுக்கென்று பெருந் தொகையாக

வாங்க ஆரம்பித்ததேயாகும். நம்மவரிற் பணக்காரர்கள் பணக்காரர்கள் வீட்டிலேயே பெண்களைக் கொடுக்கின்றார்கள். சிறிது பணமுள்ள மற்றவர்களும் அப்பணக்காரர் வீடுகளையே மிக ஆர்வத்தோடு நாடுகின்றனர். இந்நிலையில் வயதின் இளமை மூப்புக்கூடப் பார்க்க முடியவில்லை. நிற்க, நமது சமூகத்தில் ஐம்பதாயிரம் ரூபாய்கள் உள்ள ஒருவர் வீட்டிற் பணம் கொடுத்து மணமியற்றிக்கொள்ளவேண்டிய பையன்களிருப்பார்களானால் அவரைப் பணக்காரரென்று சொல்லவே முடியாது. மற்ற ஜாதியாருக்கு ஐம்பதாயிர ரூபாய்களிருந்தாலோ? அவரை ஸ்ரீமாந் என்று கூற யாரும் பின் வாங்கமாட்டார்கள்.

"இல்லாளகத்திருக்க வில்லாதமொன்றில்லை" யென நமதெளவைப்பிராட்டியாரும் 'குலமகட்கழகு தன் கொழுநனைப் பேணுதல்" என அதிவீரராம பாண்டியனாரும் கூறிச் செல்லுதலான் புருடனுக்கு மனைவி வேண்டுவதும் மனைவிக்குப் புருடன் வேண்டுவதும் இன்றியமையாததாகவிருக்கின்றது. இந்நிலையிற் பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாரிடம் பணம் பெறுதலறவழியாகுமா? பணங்கொடுத்துப் பெற்ற மனைவியர்கள் புண்ணிய காரியத்திற்குத் தாரைவார்க்க யோக்கியதையற்றவர்களென நமது புராணங்கள் கூறுகிறது. ஓய்வில்லாதுபுண்ணிய காரியங்களையே செய்துகொண்டிருக்கும் நமது சமூகத்தாருக்கு இது அடுக்காகுமாவென்பதை நீங்களே யோஜித்துப் பாருங்கள். ஸ்ரீ காசி முதல் கன்னியாகுமரி வரை அளவுகடந்த தர்மங்களைச் செய்து கண்டவர்களுக்கெல்லாங் கன்னிகாதானம் புரிந்து வரும் தர்ம சமூகத்தாரது பிள்ளைகளிற் பெரும்பாலார் மணமின்றித் தவிக்கிறார்களென்ற சொல்லைக் கேட்கச் சமூகப்பற்று நிறைந்துள்ள உங்கள் மனம் சம்மதிக்குமா? இந்த இடுக்கணைக் களைய ஊழியர் சங்கத்தார்

ஊருராகச் சென்று தீர்மானங்கள் செய்யச் செய்து படாத பாடுபட்டுத் தொண்ணூற்றுருர்க் கூட்டத்தையும் கூட்டினுர்கள். அக்கூட்டமும் கருணைகூர்ந்து நல்ல தீர்மானங்களைச் செய்தது. அத்தீர்மானங்களிற்றலையாய பெண்வீட்டார் செலவிற்காக ஐபாயிர ரூபாய் வாங்கலாமென்ற தீர்மானமும் காலபேதத்தா லழிந்தது. ஒன்றன்பின் ஒன்ருகச் சீர் முறைத் தீர்மானங்களும் வீண் செலவுத் தீர்மானங்களும் மறைய வாரம்பித்தன. வீண் செலவுகளை நினைத்தால் இங்குள்ள எவர் மனமும் புண்ணுகாதிராது. தடுமாறினுல் உடைந்து தகர்ந்துபோகக்கூடிய மண் ஜாடி, மங்குப் பிங்கான் சாமான்கள் அடித்துக்கொண்டு போகும் பணத்திற்கோ ரளவுண்டா? தரையில் வைத்துவிட்டால் கறையானரிக்கும் அல்மேனியன் ஜாமான் பறிக்கும் பணத்திற்கு வரையறையுண்டா? இவ்வளவு சாமான்களையும் அடைந்துவைப்பதற்கு "இடம்பட வீடிடேல்" என்ற நமதௌவைப் பிராட்டியாரது வாக்கையும் மீறிக் கட்டும் பெரிய வீடுகளுக்குச் செல்லுந் தொகைக்கு ஓரெல்லை யுண்டா? இவ்வாறு நமது பணம் பல வழிகளிலுஞ் சென்று கொண்டிருக்குமானுல் நாம் எப்படி முன்னேற முடியும். இனிச் சீர் முறையைப்பற்றிக் கவனிப்போமானுல் நமது முன்னேர்கள் சீர் முறையிற் பணக்காரர்களென்றும் பணமில்லாதவர்களென்றும் பேதம் பாராட்டாமல் ஒரே மாதிரியாகவே நடந்துகொண்டு வந்திருக்கிருர்களென்பதற்கு ஒரு "இசைவு பிடிமானமே" போதிய சான்ருகவிருக்கின்றது. ஆனுல் அக்காலத்தில் என்ன கொடுத்தார்களோ அதையே எழுதிவந்தார்கள். இக்காலத்திலோ கொடுப்பதொன்று எழுதுவதொன்ருகவிருக்கிறது. இப்பொழுது இவர்கள் கொடுக்கிறபடி எழுதுவதென்ருல் அரிசி மூடை ஐம்பத்தொன்று, பருப்பு மூடை பதினென்று, அம்மி இருபத்தொன்று, அரிவாள்மணை ஐம்பத்தொன்றல்லவா எழுதவேண்டும்.

அது ஒரு புறமிருக்கச் சீர்முறையில் பச்சை குத்துங் குந்தாணி அதற்கு வெள்ளிப்பூண் பிடித்த உலக்கை மாப்பிள்ளைக்குச் செருப்பு இவைகளெல்லாம் எதற்கு? கலியாணமியற்றும் மங்கள நாட்களில் வாழ்நாள் முடிவுக்குதவும் பச்சை குத்துங் குந்தாணி வெள்ளிப் பூண் பிடித்த உலக்கை இவைகளை வைக்கலாமா? இதற்கெல்லாம் ஏதாவது அர்த்தமுண்டா? நமது பெண்கள் என்ன சொன்னாலும் கேட்பதென்பது சிறப்பாகுமா? நமது பெண்களோ கல்விவாசனையறியாதவர்கள், எதைக்கண்டாலும் அவர்களுக்கு ஆசை, இவர்களுடைய ஆசையும் பிணக்குந்தான், சீர் முறைகளும் வீண் செலவுகளும் வரம்பு கடந்ததற்கு முக்கிய காரணமாகும். இனிப் பழங் கதைகளைப் பேசிக்கொண்டிருப்பதைக்காட்டிலும் எதிர்காலத்தை நேர்க்கிச் செல்லுதல் சிறப்பாகும். மறுமுறையும் தொண்ணூற்றுறார் கூட்டம் கூட்டுவதற்கு நமது நாட்டில் இப்பொழுது பெருமுயற்சியிருந்துகொண்டிருப்பதாக அறிந்து சந்தோஷிக்கிறேன் இச் செய்தி சமூகத்திற்குப் புதிய உயிர் கொடுத்ததுபோலாகும். கூட்டம் கூடிப் பெண்வீட்டுக்காரர் செலவிற்காகவும் பணம் பெறுதல் கூடாதெனவும் சீர் முறைகளை வரம்பு கட்டியும் வீண் செலவுகளை அறவே யொழிக்கும்படியானதுமான தீர்மானங்களியற்றி அத்தீர்மானங்கள் உரம் பெற்றிருப்பதற்கு இக்காலத்திற்கேற்ற முறையில் வேண்டுவன செய்து தீர்மானங்களை யாரும் மீற இடமிராதவாறு செய்ய வேண்டுமாய் நமது நாட்டிலுள்ள தொண்ணூற்றுறார் நகரத்தார்களனைவரையும் கேட்டுக்கொள்வதோடு உள்நாட்டிலும் அயல் நாட்டிலுமுள்ள நம்மவர்கள் வேண்டிய உதவிபுரிவார்களெனவும் ஊழியர் சங்கத்தார் தங்கள் தொண்டை விடாதியற்றுவார்களெனவும் நம்புகிறேன். இவ்விஷயத்தை இம்மகா நாட்டில் ஓர் தீர்மானமாகக் கொண்டுவந்து தீர்மானிக்க வேண்டுவ

துடன் அத்தீர்மானத்தை நமது நாட்டிற்கு அனுப்புவதும் சாலச் சிறந்ததாகுமென வெண்ணுகிறேன்.

நமது நாட்டிற் பெண் கல்வியைப் பரப்பவேண்டுவதுடன் இனி நமது பெண்களையும் கட்டாயமாகப் படிக்கவைப்பது மிகவும் நன்மைதருமென வெண்ணுகிறேன். நமது பெண்கள் நன்கு படித்துக்கொண்டு விடுவார்களானால் மனைவி மக்களையும் உற்றார் உறவினரையும் விட்டுப் பிரிந்து கப்பலேறி இங்கு வருடக்கணக்காகத் தங்கிப் பொருளீட்டுவதற்கு நாம் படும் சிரமங்களையும் அவர்கள் வருடக் கணக்காகப் புருடர்களை விட்டுப் பிரிந்திருக்க நேர்ந்திருப்பதனையும் நன்கு உணர்ந்துகொண்டு விடுவார்கள். அப்பாற் புருடனுடைய வருவாயறிந்து நடப்பதோடு நமது நாடு முன்னேற்றத்திற் குறு துணையாகிய உள் நாட்டுச் சாமானை வாங்கும் உணர்ச்சியுமுண்டாகும். அவ்வுணர்ச்சியுண்டாகவே அயல் நாட்டுப் போலிச் சாமான்களில் வைத்திருந்த ஆசையும் அயல் நாட்டுப் போலி வியாபாரங்களும் ஒழியும். நமது நாடு மதம் சமூகமும் தழைத்தோங்கும்

நிற்க. ஒவ்வொரு சமூகத்தாருக்கும் தனித்தனியாக எத்தனையோ பத்திரிகைகளிருக்கின்றன. அத்தனை பத்திரிகைகளையும் ஒவ்வொருவரும் ஆதரிக்கின்றனர். நமது சமூகத்திற்கென்று நமது சமூக மக்களால் நடாத்தப்பெறும் பத்திரிகைகள் "தனவைசிய ஊழியனும்" "குமரனுமே"யாகும்: இவ்விரண்டு பத்திரிகைகளையும் ஆதரிப்பது நமக்கொரு பெரிதல்ல ஒவ்வொரு நாடு சமூக முன்னேற்றங்களுக்கும் இந்த நாகரீக உலகத்திற் பத்திரிகைகள்தான் சிறந்த கருவிகளாக விருக்கின்றன. ஆதலான் நமது சமூகத்தவர் ஒவ்வொருவரும் இவ்விரண்டு பத்திரிகைகளையும் ஆத

ரிக்கவேண்டுவது மிகவும் அவசியமாகும். இரங்கூனிற் "சுதேசபரிபாலினி' நீண்ட நாட்களாக நடந்துவரும் பத்திரிகையாகவும் தினசரியாகவும், நம்மவர்களின் வியாபாரத்திற்கு உபயோகமானதாகவு மிருப்பதால் இப்பத்கிரிகையையும், கூடியவரை ஏனைய பத்திரிகைகளையும், ஆதரித்துச் செல்வ அழகோடு கல்வி அழகையும் இன்னும் மேலும் மேலும் பெருக்கிக்கொள்ள நமது குல தெய்வமாகிய ஸ்ரீ முருகப் பெருமான் அருள்புரிவாராக!

சுபம்! சுபம்!! சுபம்!!!

